## நூல் விவரப் பட்டியல்

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | நாட்டிய ரஸங்கள் |
| நூலாசிரியர் | : | க. ப்ரசாந்த் |
| வெளியிடுவோர் | : | பூங்கொடி பதிப்பகம்<br>மயிலாப்பூர், சென்னை- 600004. |
| விலை | : | ரூ. 12/- |
| நூல் உரிமை | : | ஆசிரியருக்கு |
| வெளியீடு | : | முதற்பதிப்பு : 2000 |
| நூல் அளவு | : | 1 x 8 கிரவுன் |
| பக்கங்கள் | : | 32 |
| மொழி | : | தமிழ் |
| எழுத்து | : | 11 புள்ளி |
| தாள் | : | 10.7 கி.கி. வெள்ளைத்தாள் |
| பைண்டிங் | : | சாதா அட்டை |
| ஒளி அச்சுக் கோர்ப்பு | : | ஃபாண்ட்ஸ் டீடிபி சர்வீஸ்,<br>276, திருவல்லிக்கேணி நெடுஞ்சாலை,<br>சென்னை-5. Ph : 5974836 |
| அச்சிட்டோர் | : | இரவிராஜ் ஆப்செட்,<br>14, பீட்டர்ஸ் சாலை, ராயப்பேட்டை<br>சென்னை - 600 014. |


## முன்னுரை

நாட்டிய சாஸ்திரம் என்பது பரதமுனிவரால் ஸமஸ்கிருதத்தில் எழுதப்பட்ட ஒரு அருமையான படைப்பாகும். 37 அத்தியாயங்களைக் கொண்ட இந்த நூல் கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் எழுதப்பட்டது. ஏறத்தாழ 6,000 செய்யுள்கள் இதில் அடங்கியுள்ளன. முதல் 13 அத்தியாயங்கள் நடனக் கலையைப் பற்றிய நுணுக்கங்களை விரிவாகத் தெரிவிக்கின்றன. நாட்டிய சாஸ்திரத்தின் 6-வது அத்தியாயம் உணர்ச்சிக்கனிவுகளைப் பற்றிக் கூறுகின்றது. உணர்ச்சிக் கனிவு ஸமஸ்கிருதத்தில் 'ரஸம்' என்று அழைக்கப்படுகிறது. ரஸங்கள் ஒன்பதாகும். அவை சிருங்காரம், கருணை, ஹாஸ்யம், ரௌத்ரம், வீரம், பயானகம், பீபத்ஸம், அற்புதம் மற்றும் சாந்தம் என்பவையாகும். பரதமுனிவர் முதல் எட்டு உணர்ச்சிக் கனிவுகளை மட்டும் ஒப்புக்கொள்கிறார். சாந்தரஸத்தை ஏற்றுக்கொள்ளவில்லை.

'நாட்டிய ரஸங்கள்' என்ற இந்தப் புத்தகத்தில் நான் பரதமுனிவரால் ஒப்புக் கொள்ளப்பட்ட எட்டு ரஸங்களை மட்டும் விரிவாக விளக்கியிருக்கிறேன். இப்புத்தகம் நாட்டிய வித்யார்த்திகளுக்கு உபயோகமாக இருக்கும் என நம்புகிறேன். பரத நாட்டியத்தை எனக்குக் கற்பித்த குரு திருமதி. ஜயலக்ஷ்மி அருணாசலம் அவர்களுக்கு வணக்கத்தைத்

தெரிவித்துக் கொள்கிறேன். கட்டுரை வடிவத்தில் எனது நாட்டிய ரஸங்களைப் பிரசுரம் செய்த 'ஸரிகமபதநி' இசை நாட்டிய மாத இதழின் கௌரவ ஆசிரியர் திரு. நாராயண விஸ்வநாத் அவர்களுக்கு நன்றியைச் சமர்ப்பிக்கிறேன். நாட்டிய ரஸங்களைப் புத்தக வடிவத்தில் பிரசுரித்த பூங்கொடிப் பதிப்பகத்தின் உரிமையாளர் திரு.வே. சுப்பையா அவர்களுக்கு என் முழு மனதான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

முனைவர் க. ப்ரசாந்த்

*சென்னை - 4*
*10-11-2000*

# பொருளடக்கம்

# நாட்டிய ரஸங்கள்

## ரஸம்

நாட்டிய சாஸ்திரம் என்பது பரதமுனிவரால் ஸமஸ்கிருத்தில் எழுதப்பட்ட ஓர் அருமையான படைப்பாகும். 37 அத்தியாயங்களைக் கொண்ட இந்த நூல் கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் எழுதப் பட்டது. ஏறத்தாழ 6,000 செய்யுள்கள் இதில் அடங்கியுள்ளன. முதல் 13 அத்தியாயங்கள் நடனக் கலையைப் பற்றிய நுணுக்கங்களை விரிவாகத் தெரிவிக்கின்றன.

அவற்றிற்குப்பிறகு வருகின்ற அத்தியாயங் களில் செய்யுளமைப் பியலைப்பற்றிய நியதிகள், நாடகம், நாடக இலக்கியம், நாடக இலக்கணம், நாடகக்கலைக் கோட்பாடுகள், எழுத்து நடை, பேச்சு நடை, உடையின் பாணி, நடிகரின் வேடம், சிங்காரிப்புப் பொருள்கள், இசை, இசைக்கருவி கள், தாளம் போன்ற பல விஷயங்கள் விரிவாகச் சொல்லப்பட்டிருக்கின்றன.

நாட்டிய சாஸ்திரத்தின் 6-வது அத்தியாயம் உணர்ச்சிக் கனிவுகளைப் பற்றிக் கூறுகின்றது.

உணர்ச்சிக் கனிவு ஸமஸ்கிருதத்தில் 'ரஸம்' என்று அழைக்கப்படுகிறது. ரஸங்கள் ஒன்பதாகும். அவை சிருங்காரம், கருணை, ஹாஸ்யம், ரௌத்ரம், வீரம், பயானகம், பீபத்ஸம், அற்புதம் மற்றும் சாந்தம் என்பவையாகும். பரதமுனிவர் முதல் எட்டு உணர்ச்சிக் கனிவுகளை மட்டும் ஒப்புக்கொள்கிறார். சாந்தரஸத்தை ஏற்றுக் கொள்ளவில்லை.

மேற்கூறப்பட்ட ஒவ்வொரு ரஸத்திற்கும் ஒரு ஸ்தாயிபாவம் சொல்லப்பட்டிருக்கின்றது. ஸ்தாயி பாவம் என்பது விபாவங்களால் ஏற்படுகின்ற ஒரு மன நிலையாகும். (State of the mind) இந்த ஸ்தாயிபாவமானது வளர்ச்சி அடைந்தால் அது ரஸமாகத் தோன்றும். ஸ்தாயி பாவங்களைப் பற்றிக் கூறுவதற்கு முன்னால் விபாவங்களைப் பற்றி கூறுகிறேன்.





# விபாவம்

விபாவம் இரு வகைப்படும்

1. ஆலம்பன விபாவம்
2. உத்தீபன விபாவம்

உணர்ச்சிக் கனிவுக்குத் தேவையான முக்கியமான காரணம் - 'பாவம்'. அந்த பாவத்தைத் தூண்டுவது ஆலம்பன விபாவமாகும். இன்னும் சொல்லப்போனால் ஆலம்பன விபாவமில்லாமல் குறிப்பிட்ட ரஸமானது உண்டாகாது. ஆலம்பன விபாவத்திற்கான சிறந்ததொரு உதாரணம் நாயக - நாயகி உறவுமுறை போன்றவை. ஆலம்பன விபாவத்திற்கு உதவியாக இருக்கும் விபாவம் உத்தீபன விபாவம் எனப்படும். வெண்ணிலா. சந்திரனின் ஒளி, மெதுவாக வீசும் காற்று, ரகசிய இடம் போன்றவை உதாரணங்கள். இவைகளெல்லாம் சிருங்கார ரஸத்தின் ஆலம்பன விபாவமான நாயக - நாயகி உறவுமுறையைத் தூண்டும் விபாவங்கள். எனவே இவைகள் உத்தீபன விபாவங்கள் எனப்படும். 'உத்தீபனம்' என்றால் தூண்டுவது என்று பொருள்.



# ஸாத்விக பாவம்

விபாவங்களுக்கு அடுத்தபடியாக ஸாத்விக பாவங்களைக் கூறலாம். மகிழ்ச்சி அடையும் பொழுதும், சோகமடையும் பொழுதும் மனதுக் குள்ளே ஏற்படுகின்ற உணர்ச்சிகளை வெளிப்படை யாகத் தெரியப்படுத்துகின்ற மனநிலைகள் ஸாத் விக பாவங்களாகும். அதிர்ச்சியினால் கல்லாகுதல், வியர்வை, மயிர்ப்புடைப்பு, நிறமாற்றம், குரல் மாற்றம், கண்ணீர் போன்றவை ஸாத்விக பாவங்கள்.





# சஞ்சாரி பாவம்

ஸாத்விக பாவங்களுக்கு அடுத்த படியாக சஞ்சாரி பாவங்களைக் கூறலாம். சஞ்சாரி பாவத் திற்கு வ்யபிசாரி பாவம் என்று மற்றொரு பெயரும் உண்டு. சஞ்சாரம் செய்கின்ற காரணத்தினால் இந்த மனநிலைக்கு சஞ்சாரி பாவம் என்ற பெயர் வந்துள்ளது. இந்த பாவங்கள் அதிகநேரம் மனதில் நிற்பதில்லை. வந்து போகின்ற காரணத்தினால் இவைகளுக்கு சஞ்சாரி பாவங்கள் என்ற பெயர் வந்துள்ளது.

ஊக்கமின்மை, வலுக்குறைவு, அச்சம், பொறாமை, வெறி, களைப்பு, சோம்பல், சோர்வு, கவலை, கவனமாற்றம், நினைவு, மனநிறைவு, வெட்கம், நிலையாமை, மகிழ்ச்சி, கலக்கம், வியப்பு, அகந்தை, மனக்கசப்பு, பொறுமையின்மை உறக்கம், உணர்வற்றநிலை, கனவு, விழிப்பு, கடுஞ்சினம், பாசாங்கு, கடுமை, நம்பிக்கை, நோய் நிலை, தன்னிலை மறந்த நிலை, இறப்பு, திகில், அமைதி என்ற 33 சஞ்சாரி பாவங்கள் நாட்டிய சாஸ்திரத்தில் பரதமுனிவரால் கூறப்பட்டிருக் கின்றன.

விபாவங்கள், ஸாத்விக பாவங்கள், சஞ்சாரி பாவங்கள் என்ற மூன்று விதமான பாவங்களை நாம் ஒவ்வொன்றாகப் பார்த்தோம். ஒரு குறிப் பிட்ட ரஸமானது ஏற்படுவதற்கு இந்த மூன்று பாவங்களுமே மிகவும் உதவி புரிகின்றன. குறிப் பிட்ட ரஸமென்று சொன்னால் அந்த ரஸத்துக்குரிய ஸ்தாயிபாவமென்று எடுத்துக் கொள்ளலாம். ஏனென்றால் ஸ்தாயிபாவமானது வளர்ச்சி அடைந் தால் அது ரஸமாகத் தோன்றுமென்று முன்பே நான் கூறினேனல்லவா!





# ஸ்தாயி பாவம்

ஒவ்வொரு ரஸத்திற்கும் ஒவ்வொரு ஸ்தாயி பாவமானது குறிப்பிடப்பட்டதால் ஸ்தாயி பாவங் களின் மொத்த எண்ணிக்கை எட்டாகிறது. சாந்த ரஸத்தை ஒன்பதாவது ரஸமாக ஏற்றுக்கொண் டால், அதற்குரிய ஸ்தாயிபாவம் 'சமா'. சமா என்றால் அமைதி என்று பொருள்

ரதி, ஹாஸா, சோகா, கரோதா, உத்ஸாஹா, பயா, ஜுகுப்ஸா, விஸ்மயா என்பவை எட்டு ஸ்தாயிபாவங்கள்

**ரஸங்கள் ஸ்தாயிபாவங்கள்**

| | | |
|---|---|---|
| 1. | ச்ருங்காரம் | ரதி |
| 2. | ஹாஸ்யம் | ஹாஸம் |
| 3. | கருணை | சோகம் |
| 4. | ரௌத்ரம் | க்ரோதம் |
| 5. | வீரம் | உத்ஸாஹம் |
| 6. | பயானகம் | பயம் |
| 7. | பீபத்ஸம் | ஜுகுப்ஸா |
| 8. | அத்புதம் | விஸ்மயம் |
| 9. | சாந்தம் | சமம் |

மேற் கூறப்பட்ட அனைத்து பதங்களும் ஸமஸ்க்ருத பதங்கள். இந்த எட்டு ஸ்தாயி பாவங்களின் தமிழ்ப் பொருள்கள் கீழ்க் கண்டவை.

ரதி = காதல்; ஹாஸம்=சிரிப்பு; சோகம் = துயரம்; க்ரோதம் = கோபம்; உத்ஸாஹம் = ஊக்கம்; பயம் = திகில்; ஜுகுப்ஸா=அருவருப்பு; விஸ்மயம் = வியப்பு.

இவ்விதம் ஒவ்வொரு ரஸத்திற்கும் ஒவ்வொரு ஸ்தாயிபாவத்தை நாம் பார்த்தோம்.

பல நறுமணப்பொருட்கள் மற்றும் காய்கறிகளின் இணைதலால் எவ்விதம் சுவையானது உண்டாகிறதோ அதே போல் பல பாவங்களின் சேர்தலால் ரஸமானது உண்டாகிறது.

ரஸமென்கின்ற பதத்தின் பொருளென்ன? சுவைக்கப்படுகிறது என்ற காரணத்தினால் அதை ரஸமென்கிறோம். ரஸமென்பது எவ்வாறு சுவைக்கப்படுகிறது. பல நறுமணப்பொருட்கள் மற்றும் காய்கறிகளின் இணைதலால் சமைக்கப்பட்ட உணவை எவ்வாறு ஒருவன் மகிழ்ந்து சாபிடுகிறானோ அதே போல் பல பாவங்களின் இணைதலால் உருவாக்கப்பட்ட ரஸத்தை ஒரு ரசிகன் மகிழ்ந்து ரசிக்கிறான்.



பல பாவங்களால் ரஸமானது தோன்றுவதையும், ரஸமென்பது பல பாவங்களின் இருப்பிடமாக இருப்பதையும் நாம் பார்த்தோம். அடுத்தபடியாக ஒவ்வொரு ரஸத்தைப் பற்றியும் விரிவாகத் தெரிந்து கொள்வோம்.



# உற்பத்தி ஸ்தானங்கள்

ஒவ்வொரு ரஸத்தைப் பற்றித் தனித்தனியாகப் பார்ப்பதற்கு முன்னால் இந்த ரஸங்களுடைய உற்பத்தி ஸ்தானங்கள், நிறங்கள் மற்றும் குடியிருக்கும் தெயங்களைப் பற்றித் தெரிந்து கொள்வோம்.

நான்கு மூல ரஸங்களிலிருந்து தான் மற்ற நான்கு ரஸங்கள் தோன்றும் அந்த நான்கு மூல ரஸங்கள் ச்ருங்காரம், ரௌத்ரம், வீரம் மற்றும் பீபத்ஸம், ச்ருங்காரத்திலிருந்து ஹாஸ்யமும், ரௌத்திரத்திலிருந்து கருணையும், வீரத்திலிருந்து அத்புதமும், பீபத்ஸத்திலிருந்து பயானகமும் தோன்றின.





# ரஸங்களின் நிறங்கள்

ரஸங்களின் நிறப்பட்டியல்

| | ரஸங்கள் | நிறங்கள் |
|---|---|---|
| 1. | ச்ருங்காரம் | பச்சை |
| 2. | ஹாஸ்யம் | வெண்மை |
| 3. | கருணை | சாம்பல் |
| 4. | ரௌத்ரம் | சிவப்பு |
| 5. | வீரம் | வெளிர் |
| 6. | பயானகம் | கருப்பு |
| 7. | பீபத்ஸம் | நீலம் |
| 8. | அத்புதம் | மஞ்சள் |



# குடியிருக்கும் தெய்வங்கள்

அடுத்தபடியாக ரஸங்களில் குடியிருக்கும் தெய்வங்களைப் பார்ப்போம். ச்ருங்காரத்தில் விஷ்ணுவும், ஹாஸ்யத்தில் ப்ரமததேவனும், ரௌத்ரத்தில் ருத்ரனும், கருணையில் யமனும், பீபத்ஸத் தில் மஹாகாலனும், பயானகத்தில் காலதேவனும், வீரத்தில் மஹேந்த்ரதேவனும், அத்புதத்தில் ப்ரஹ்மதேவனும் வசிக்கின்றார்கள்.





# ச்ருங்கார ரஸம்

ச்ருங்காரரஸத்தின் ஸ்தாயிபாவம் ரதி. பிரகாசமான உடையை அணிவது இந்த ரஸத்தின் அடிப்படையாகும். இந்த உலகத்தில் எது சுத்தமாகவும் பிரகாசமாகவும் அழகாகவும் காணப்படுகின்றதோ அது ஆசைக்கண்களால் பார்க்கப்பட்டு மதிக்கப்படுகின்றது. உடைகளை அழகாக அணிந்திருப்பவன் அழகனென்று அழைக்கப்படுவான்.

ச்ருங்கார ரஸம் இளமைக்குச் சம்பந்தப்பட்டது. இது இரு வகைப்படும். ஸம்போக ச்ருங்காரம் மற்றும் விப்ரலம்ப ச்ருங்காரம். சம்போக ச்ருங்காரமென்றால் காதலன் மற்றும் காதலி இருவரின் சேர்க்கையினால் ஏற்படுகின்ற உணர்ச்சிக் கனிவு. இருவரின் பிரிவினால் ஏற்படுகின்ற உணர்ச்சிக் கனிவு விப்ரலம்ப ச்ருங்காரம்

பருவகாலத்தின் மகிழ்ச்சிகள், மாலைகள், வாசனைப் பொருட்களை ஆபரணங்கள் போன்றவைகள் அனுபவிப்பது, மனதுக்குப் பிடித்தவர்களுடன் இருப்பது, இந்திரிய விஷயங்கள், அற்புதமான பவனங்கள், தோட்டம் பூங்கா போன்ற இடங்களுக்கு செல்லுதல் மற்றும் அங்கு சந்தோஷ

மடைதல், காதல் கொண்டவனைக் காணுதல். அவனுடைய / அவளுடைய வார்த்தைகளைக் கேட்டல் போன்ற விபாவங்களால் ஸம்போக ச்ருங்கார மானது ஏற்படுகின்றது.

கண்களில் மற்றும் புருவங்களின் சாதுர்யமான அசைவுகளால், மிருதுவான மற்றும் நுண்ணிய அங்க அசைவால், இனிப்பான வார்த்தைகளால் ஸம்போக ச்ருங்கரமானது மேடையில் வர்ணிக்கப் பட வேண்டும். மேடையில் வர்ணிக்க உதவும் இவைகள் அனுபாவங்கள் எனக் கூறப்படுகின்றன. பயம் சோம்பல், கடுமை, வெறுப்பு, இந்த நான் கைத் தவிர மற்ற வியபிசாரி பாவங்களெல்லாம் ஸம்போக ச்ருங்காரத்தில் வந்து போகும். ஊக்க மின்மை, வலுக்குறைவு, அச்சம், பொறாமை, களைப்பு. கவலை. பொறுமையின்மை, உறக்கம், கனவு, நோய்நிலை, தன்னிலை மறந்த நிலை, உணர் வற்றநிலை, வியப்பு, இறப்பு போன்ற பாவங் களால் விப்ரலம்ப ச்ருங்காரமானது மேடையில் வர்ணிக்கப்பட வேண்டும்.





# ஹாஸ்ய ரஸம்

ஹாஸ்ய ரஸத்தின் ஸ்தாயி பாவம் ஹாஸம். அநுசிதமான உடைகளை அல்லது ஆபரணங்களை அணிதல், அவலட்சணமாகப் பேசுதல். வெட்கங் கெட்டத் தன்மை, பேராசை, சண்டை, புலம்பல். அங்கவிகாரங்கள். மாறுபட்ட குற்றங்களைக் கூறுதல் போன்ற விபாவங்களால் ஹாஸ்யமானது ஏற்படுகின்றது. உதடுகள், பற்கள், மூக்கு மற்றும் கன்னங்களின் துடிப்பு, கண்களை அகலமாகத் திறப்பது அல்லது சுருக்குவது, வியர்வை, முகத்தின் நிறம், பக்கப்பிடிப்பு (Holding the sides by hands) போன்ற அனுபாவங்களால் ஹாஸ்யரஸமானது மேடையில் வாணிக்கப்படவேண்டும். இந்த ரஸத்தில் வந்து போகும் வ்யபிசாரி பாவங்கள் சோம்பல், மறைத்தல், உறக்கம், கனவு, விழிப்பு, பொறாமை போன்றவை.

ஹாஸ்யம் இருவகைப்படும். ஆத்மஸ்தம் மற்றும் பரஸ்தம். ஒருவன் தானாகவே சிரித்தால் அது ஆத்மஸ்தம். ஒருவன் மற்றவர்களைச் சிரிக்க வைத்தால் அது பரஸ்தமாகும்.

ஹாஸ்யரஸம் மீண்டும் ஆறு வகைப்படும்.

அவை - (1) ஸ்மிதம் (2) ஹஸிதம் (3) விஹஸிதம் (4) உபஹஸிதம் (5) அபஹஸிதம் (6) அதிஹஸிதம் என்பவை. இரண்டு இரண்டாக இவைகள் உத்தமர்களிடத்திலும், மத்யமர்களிடத்திலும் மற்றும் அதமர்களிடத்திலும் காணப்படுகின்றன. அதாவது ஸ்மிதமும், ஹஸிதமும் உத்தமர்களிடத்திலும், விஹஸிதமும், உபஹஸிதமும், மத்தியமர்களிடத்திலும், அபஹஸிதமும், அதிஹஸிதமும் அதமர்களிடத்திலும் காணப்படும். உத்தமர்களென்றால் சிறந்தவர்கள் அல்லது (குணத்தில்) மேலானவர்களென்றும், மத்யமர்களென்றால் மேலானவர்களுக்குச் சற்று குறைவானவர்கள் என்றும், அதமர்களென்றால் தரத்தில் குறைந்தவர்கள் அல்லது மட்டமானவர்கள் என்றும் பொருள். மேற் கூறப்பட்ட சிரிப்பு வகைகளின் விசேஷகுணங்கள் கீழ்கண்டவாறு.

சிரிப்பு விசேஷகுணங்கள்

**1. ஸ்மிதம்**

சொற்பமாக மலர்ந்த கன்னம், அழகான பார்வை, காணப்படாத பற்கள்.

**2. ஹஸிதம்**

நன்றாய் மலர்ந்த கண்கள், முகம் மற்றும் கன்னங்கள், சொற்பமாகக் காணப்படும் பற்கள்.



**3. விஹஸிதம்**

சிரிக்கும் பொழுது சொற்பமான ஒலி, இனிப்பு, சமயத்திற்குத் தகுந்த சிரிப்பு, சுருங்கிக்காணப்படும் கண்கள் மற்றும் கன்னங்கள், சந்தோஷத்துடன் கூடிய முகம்.

**4. உபஹஸிதம்**

நன்றாய் விரிந்த மூக்கு, ஓரக்கண்பார்வை, வளைந்த தோள் மற்றும் தலை (இதைப் பரிஹாசம் என்று கூறலாம்)

**5. அபஹஸிதம்**

சந்தர்ப்பத்திற்குத் தகாத சிரிப்பு, கண்ணீரால் நிரப்பப்பட்ட கண்கள், தோளின் மற்றும் தலையின் பலவந்தமான அசைவு. (இதை அநாகரிக சிரிப்பு என்று கூறலாம்)

**6. அதிஹஸிதம்**

நன்றாய் விரிந்தக் கண்ணீருடன் காணப்படுகின்ற கண்கள், (சிரிக்கும் பொழுது) உரத்த சப்தம், பக்கப்பிடிப்பு (Holding the sides by hands) (இது மிக அதிகமான சிரிப்பு).



# கருணாரஸம்

கருணரஸத்தின் ஸ்தாயிபாவம் சோகம். சாபத்தினால் உண்டாகும் வேதனை, மனதுக்குப் பிடித்தவர்களிடமிருந்து பிரிவு, செல்வத்தின் இழப்பு, இறப்பு, சிறைப்பட்ட நிலை, நெருக்கடி நிலை, விபத்து, அவப்பேறு போன்ற விபாவங்களால் கருணரஸமானது ஏற்படுகின்றது. கண்ணீர் வடிய விடுதல், புலம்புதல், வறண்டவாய், நிறமாற்றம், இனிந்த பக்க உறுப்புகள், மூச்சு வாங்குதல், நினைவில்லாத நிலை, போன்ற அனுபாவங்களால் கருணரஸமானது மேடையில் வர்ணிக்கப்பட வேண்டும். இந்தத ரஸத்தில் வந்து போகும் வ்யபிசாரி பாவங்கள் ஊக்கமின்மை, வலுக்குறைவு, கவலை, பொறுமையின்மை, கலக்கம், கவன மாற்றம், களைப்பு, மனக்கசப்பு, சோர்வு, நோய் நிலை, வியப்பு, தன்னிலை மறந்த நிலை, உணர் வற்ற நிலை, திகில், சோம்பல், இறப்பு போன் றவை. அதிர்ச்சியினால் கல்லாகுதல், நடுக்கம், நிறமாற்றம், கண்ணீர், குரல் மாற்றம் போன்றவை இந்த ரஸத்தின் ஸாத்விக பாவங்கள்.



ச்ருங்கார ரஸத்தைப் பற்றி விளக்கும் பொழுது விப்ரலம்ப ச்ருங்காரத்தைப் பற்றிக் கூறினேனல் லவா! காதலன் மற்றும் காதலி - இருவரின் பிரிவி னால் ஏற்படுகின்ற உணர்ச்சிக்கனிவு விப்ரலம் பச்ருங்காரமாகுமென்று தெரிவித்தேன். ஊக்க மின்மை, வலுக்குறைவு, அச்சம், பொறாமை, களைப்பு, கவலை, பொறுமையின்மை, உறக்கம், கனவு, நோய் நிலை, தன்னிலை மறந்த நிலை உணர்வற்றநிலை, வியப்பு, இறப்பு போன்ற அனுபாவங்களால் விப்ரலம்ப ச்ருங்காரமானது மேடையில் வர்ணிக்கப்பட வேண்டும். ச்ருங்கார மென்பது ரதி அல்லது காதலின் அடிப்படையின் தோற்றமென்று சொன்னால், கருணரஸத்திற்குச் சம்பந்தப்பட்ட பாவங்கள் எவ்வாறு விப்ரலம் பச்ருங்காரத்தில் இடம் பெறுகின்றன! இந்தக் கேள்வி மிக நல்லதொரு கேள்வி. இதற்குப் பதில் - கருணை என்பது சாபத்தினால் உண்டாகும் வேதனை, மனதுக்குப் பிடித்தவர்களிலிருந்து பிரிவு, செல்வத்தின் இழப்பு, இறப்பு, சிறைப்பட்ட நிலை, நெருக்கடி நிலை, விபத்து, அவப்பேறு போன்ற விபாவங்களால் ஏற்பட்டு நிரபேக்ஷமாகக் காணப்படும். ஸமஸ்கிருதத்தில் 'நிரபேக்ஷ' என் றால் 'நம்பிக்கை இழப்பு' என்று பொருள். அதா வது கருணரஸத்தில், பிரிந்தவர்கள் ஒன்று சேர

முடியாது. ஒன்று சேருவதற்கான நம்பிக்கையும் காதலனின் மரணத்தால் இழக்கப்படுகிறது. ஆனால் விப்ரலம்ப ச்ருங்காரம் 'ஸாபேக்ஷ'மானது. அதாவது 'நம்பிக்கையுடன் கூடியது' என்று பொருள். பிரிந்த காதலர்கள் மீண்டும் ஒன்று சேரமுடியும். ஒன்று சேருவதற்கான நம்பிக்கையும் உறுதியாக இருக்கும். இதுதான் கருணரஸத்திற்கும், விப்ரலம்பச்ருங்காரத்திற்கும் இடையில் காணப்படுகின்ற வேறுபாடு.





# ரௌத்ர ரஸம்

ரௌத்ர ரஸத்தின் ஸ்தாயி பாவம் க்ரோதம். இந்த ரஸம் கோபம், வன்முறைப் பழிச் செயல், மோசடி, அவமதிப்பு, பொய்மை, சாட்டுரை (allegation) அச்சுறுத்துதல், பழிக்குப்பழி, பொறாமை போன்ற விபாவங்களால் ஏற்படுகின்றது. ரௌத்ர ரஸத்தின் செயல்கள் அடித்தல், உடைத்தல், கசக்குதல், சண்டை, ரத்தப்பெருக்கு போன்றவை. சிவந்தகண்கள். புருவத்தின் துன்னுதல், எதிர்ப்பு, உதட்டைக் கடித்தல், கன்னங்களின் அசைவு, ஒரு கையை மற்றொரு கையில் அழுத்துதல் போன்ற அனுபாவங்களால் ரௌத்ர ரஸமானது மேடையில் வர்ணிக்கப்பட வேண்டும். கலக்கம், கடுஞ்சினம். நிலையாமை, பொறுமையின்மை. கடுமை. வியர்வை, நடுக்கம், போன்றவை இந்த ரஸத்தில் வந்து போகும் வ்யபிசாரி பாவங்கள். வியர்வை, நடுக்கம், மயிர்ப்புடைப்பு, குரல் மாற்றம் போன்றவை இந்த ரஸத்தின் ஸாத்விக பாவங்கள்.



# வீர ரஸம்

வீர ரஸத்தின் ஸ்தாயிபாவம் உத்ஸாஹம். இந்த ரஸம் விடா முயற்சியுடன் செயலாற்றுதல், செயல் நயம் (diplomacy), கட்டுப்பாடு, வலிமை, வலியத்தாக்கும் தன்மை (aggressiveness), செயல் விளைவு போன்ற விபாவங்களால் ஏற்படுகின்றது. உறுதியான நிலை, பொறுமை, பேராண்மை, அன்பிணக்கம், செயல் நயம் போன்ற அனுபாவங்களால் வீர ரஸமானது மேடையில் வர்ணிக்கப்பட வேண்டும். மனநிறைவு, நம்பிக்கை, அகந்தை, கலக்கம், கடுமை, கடுஞ்சினம், நினைவு போன்றவை இந்த ரஸத்தில் வந்து போகும் வ்யபிசாரி பாவங்கள்.





# பயானக ரஸம்

பயானக ரஸத்தின் ஸ்தாயிபாவம் பயம். பயங்கரமான ஒலி, பேய்களைக் காணுதல், நரிகள் மற்றும் ஆந்தைகளின் கூச்சலால் ஏற்படுகின்ற திகில், வறிதான வீட்டில் அல்லது காட்டில் தங்கியிருப்பு, சாவைக் காணுதல், மனதுக்குப் பிடித்தவர்களின் சிறைப்பட்ட நிலை போன்ற விபாவங்களால் பயானக ரஸமானது ஏற்படுகின்றது. கைகள் மற்றும் கால்களில் நடுங்குதல், மயிர்ப்புடைப்பு, நிற மாற்றம், குரல் மாற்றம் போன்ற அனுபாவங்களால் பயானக ரஸமானது மேடையில் வர்ணிக்கப்பட வேண்டும். இந்த ரஸத்தில் வந்து போகும் வ்யபிசாரிபாவங்கள் அச்சம், கவனமாற்றம், சோர்வு, கலக்கம், நிலையாமை, திகில், உணர்வற்றநிலை. வியர்வை, மயிர்ப்புடைப்பு, நிறமாற்றம், குரல் மாற்றம், நடுக்கம் போன்றவை இந்த ரஸத்தின் ஸாத்விக பாவங்கள்.



# பீபத்ஸ ரஸம்

பீபத்ஸ ரஸத்தின் ஸ்தாயி பாவம் ஜுகுப்ஸா. வெறுப்பு விளைவிக்கிற செய்திகளைக் கேட்பது. புண்படுத்துகிற மற்றும் தூய்மையற்ற பொருள்களைப் பற்றிப் பேசுவது அல்லது அவைகளைப் பார்ப்பது போன்ற விபாவங்களால் பீபத்ஸ ரஸமானது ஏற்படுகின்றது. கண்களை மற்றும் வாயை சுருக்கிக் கொள்வது மூக்கை மூடிக்கொள்வது, தலைகுனிந்து செல்வது போன்ற அனுபாவங்களால் பீபத்ஸ ரஸமானது மேடையில் வர்ணிக்கப்பட வேண்டும். இந்த ரஸத்தில் வந்து போகின்ற வ்யபிசாரி பாவங்கள் உணர்வற்ற நிலை, கலக்கம், கவனமாற்றம், நோய்நிலை, இறப்பு போன்றவை.





# அத்புத ரஸம்

அத்புத ரஸத்தின் ஸ்தாயிபாவம் விஸ்மயம். வானுலகத்துக்குரிய உயிரினங்களை அல்லது நிகழ்ச்சிகளைப் பார்ப்பது, விரும்பிய பொருள்கள் கிடைப்பது. உயர்தரமான மாளிகை, கோயில் அல்லது மன்றத்துக்குள் செல்வது. மந்திரச் செயல்களைப் பார்ப்பது போன்ற விபாவங்களால் அத்புத ரஸமானது ஏற்படுகின்றது. கண்களை நன்கு திறப்பது, நிலையான பார்வை, ஆனந்தக்கண்ணீர், மகிழ்ச்சி, ஹா ஹா என்ற கூச்சல் போன்ற அனுபாவங்களால் அத்புத ரஸமானது மேடையில் வர்ணிக்கப்பட வேண்டும். இந்த ரஸத்ததில் வந்து போகும் வ்யபிசாரி பாவங்கள் கலக்கம், வ்யப்பு போன்றவை. கண்ணீர், அதிர்ச்சியினால் கல்லாகுதல், வியர்வை, குரல் மாற்றம், மயிர்ப்புடைப்பு போன்றவை அத்புத ரஸத்தின் ஸாத்வித பாவங்களாகும்.

